[27th September 1958

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் இதற்கு தனியாக கேள்வி போட்டால் விவரங்களை தெரிவிக்கிறேன். இருந்தாலும் இந்த விஷயத்தில் ஒரு நல்ல முறையை ஏற்படுத்தவேண்டும் என்று அரசாங்கம் முயற்சி செய்து வருகிறது.

SRI K. G. PALANISWAMY GOUNDER : ஸார், இப்போது லோயர் பவானி ஏரியாவில் எங்கள் பகுதியில் 60, 65 சதவிகிதம்தான் தண்ணீர் வருகிறது. இதனால் தண்ணீர் குறைவாகத்தான் கிடைக்கிறது. இதன் காரணமாக வரி வசூல் அதிகமாகப் பாதிக்கப்படுகிறது. ஆகவே இதை நிவர்த்திக்க அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN : லோயர் பவானி அணைக்கட்டில் கடைசி பகுதிகள் பாதிக்கப்படுகிறது என்பது உண்மைதான். அதை நீக்குவதற்கு அரசாங்கம் முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறது.

SRI P. G. MANICKAM : நஞ்சை, புஞ்சை, தோட்டக்கால் என்று பிரிவு செய்வதற்குள்ள சர்வே தீருவதற்கு எவ்வளவு காலம் ஆகும் ?

THE HON. SRI P. KAKKAN : இப்போதுதான் அதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. கூடிய சீக்கிரம் இது முடிவு அடையும் என்று நம்புகிறேன்.

SRI K. G. PALANISWAMY GOUNDER : ஸார், இந்த பகுதிகளில் தண்ணீர் பெறுவதற்கு வசதி ஏற்படும் வரையிலும் இப்போது நடத்தப்படும் வரி வசூலை நிறுத்தி வைக்க அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : அவ்விதம ஒன்றும் செய்ய முடியாது.

*Drinking water-supply in the City*

* *S.N.Q.* 24.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government are aware that the drinking water supplied to the residents in the Madras City has deteriorated in quality ; and

(*b*) if so, what action has been taken to supply pure water?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes. There has been slight deterioration in the chemical quality of the water during the last few weeks. But the bacterial purity has always been ensured by sterilization of the water with adequate doses of chlorine.

(*b*) Cleaning of slow sand filters and scouring out of the water mains.

SRI N. K. PALANISAMI : Sir, may I know from the Hon. Minister why the water supplied to the City is very bad in taste, and contains bacteria and dust particles? May I also know whether rapid mechanical water filters that have been installed are ineffective with the result that the water contains all sorts of available matter and there is also colloidal suspension?

27th September 1958]

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, as regards the mechanical filters it was expected that 10 million gallons could be got through the filters. But now the clarifiers had not been completed and only five million gallons are got through them. The quality of the water is made all right by treatment of chlorine. There is no bacterial defect in the water.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware of the fact that the water now supplied to the citizens is non-vegetarian in quality since it contains all sorts of bacteria and will the Government take necessary steps to have the water completely mechanically filtered?

THE HON. SRI M. A. MANICKAVELU : I said already that the expectation of 10 million gallons could not be reached and only 5 million gallons could be got at present. In another two months five more million gallons could be got mechanically filtered.

SRI A. V. P. ASAITHAMBI : தலைவர் அவர்களே, சென்னை நகரில் இப்போது வரப்படும் குழாய் தண்ணீரில் வெறும் துர்நாற்றம் மாத்திரம் இருப்பதோடு அல்லாமல் புழு, பூச்சிகள், செத்தை ஆகியவைகள் சேர்ந்து வருகின்றன. இதை அப்படியே பொதுமக்கள் குடிப்பதால் பல வியாதிகள் பரவுகின்றன. ஆகவே இந்த தண்ணீரை வடிகட்டி, சுட வைத்து உபயோகிக்க வேண்டும் என்றுள்ள விளம்பரம் இதுவரைக்கும் செய்யப்படவில்லை. இனிமேலாவது உடனடியாக இவ்விதம் விளம்பரம் அதிகமாக செய்வதற்கு அரசாங்கத்தார் நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : தண்ணீரில் இவ்விதம் தூசி, புழு, பூச்சி, செத்தை இருப்பதை பொது மக்கள் கண்டால் அதை வடிகட்டி தான் சாப்பிடுவார்கள். இதற்கு பிரத்யேகமாக விளம்பரங்கள் ஒன்றும் தேவையில்லை.

SRI K. VINAYAKAM : Is the Hon. Minister aware of the fact that the so-called deterioration in the quality of water supplied to the citizens is caused by the presence of non-dissolvable fungus matter which is in the water and which again is caused by the fishing operations that are carried on in the Poondi reservoir by the fishermen who have the right of fishing? The fishing operations disturb the lower sediment especially when the water level in the reservoir goes down. Therefore, will the Government take necessary steps to prohibit the fishermen from fishing in the reservoir especially when the water level goes down?

MR. SPEAKER : The hon. Member knows the answer. Then why should he put the question? I have no objection if the Minister wants to answer.

SRI K. VINAYAKAM : A wrong impression has been created in the minds of the people regarding the quality of the water supplied. I wanted to clear it up by putting this question.

THE HON. SRI M. A. MANICKAVELU : The presence of vegetable matter in water is not due to fishing operations. Fishing only disturbs the vegetable matter and therefore there is some smell in the water. Now, there is fresh supply of water. Water level has gone up and the trouble is not there now.

SRI N. K. PALANISAMI : May I know from the Hon. Minister whether there were proposals to bring water from Andhra rivers to augment the City water-supply and if so the stage at which the proposal stands now?

MR. SPEAKER : The hon. Member may put a separate question.

*Tamil typists*

* *S.N.Q.* 25.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Board of Revenue recommended to the Government to sanction a special pay of Rs. 25 per mensem for Higher Grade typists in Tamil on 20th November 1949; and

(*b*) if so, the details and action taken on the same?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir. The recommendation was made by the Board on 30th November 1949 and not on 20th November 1949.

(*b*) The Government sanctioned an allowance of Rs. 15 per mensem to the language typists qualified by the Higher Grade and of Rs. 7–8–0 per mensem to those qualified by the Lower Grade.

*Transfer of draftsmen*

* *S.N.Q.* 26.—SRI M. R. KANDASWAMI MUDALIYAR (on behalf of Sri T. S. Ramaswamy Pillai) : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether the pay, allowances and service conditions of five draftsmen of Public Works Department of former Travancore-Cochin State transferred now to the Highways Department have been affected;

(*b*) whether the Government have received any representations against the transfer affecting their services and if so, when; and

(*c*) the fate of their representations, if any?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No information is available on this point. A report has been called for from the Chief Engineer (Highways) and it is awaited.

(*b*) No, Sir.

(*c*) Does not arise.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : தலைவர் அவர்களே, இவ்விதம் ராஜ்யங்கள் மாற்றங்கள் ஏற்பட்டத்தின் காரணமாக ஊழியர்களின் சம்பள விகிதம், அதாவது 140 ரூபாய் கிடைத்துக்கொண்டிருந்தது மாற்றத்தின் காரணமாக 110 ரூபாய் தான் கிடைக்கிறது என்று சொல்லுகிறார்கள். ஆகவே இதை ஒரே முறையில் கொடுக்கவேண்டும் என்று அரசாங்கத்திற்கு ஏதாவது விண்ணப்பங்கள் வந்திருக்கின்றனவா ? அப்படியென்றால் அதன் பேரில் உடனடியாக நடவடிக்கை எடுக்கப்படுமா ?

THE HON. SRI P. KAKKAN : இதற்கு தனிக்கேள்வி வேண்டும்.